

ஏராளமான கருத்தோவியங்களைத் தன்னகத்தே கொண்டது

தொல்பொருளாய்வுத்துறை, நூலகம்.




## வெளிவந்து விட்டது! திரிபுவனம் கோயில்.

குடந்தைக்கருகில் உள்ள திரிபுவனத்தில் மதுரையும் கருவூரும் ஈழமும் கொண்ட மூன்றும் குலோத்துங்கன் தோற்றுவித்த பெருங் கோயிலைப் (கம்பஹரேஸ்வரர் என்று இன்று அழைக்கப் பெறுவது) பற்றிய ஆராய்ச்சி நூல்; அழகிய படங்களோடு மிளிர்கின்ற நூல் வெளி வந்து விட்டது. விலை 12-00 ரூபாய்தான்.

THE KAMPAHARESVARA TEMPLE BY H. SARKAR

* * * * * * * * * * * * * * * * * * * * * * * * *

## வெளிவருகிறது! தஞ்சை இராஜராஜேச்சுரம் BY இரா. நாகசாமி

தமிழகத்தின் தவப்புதல்வன் இராஜராஜன் தஞ்சையில் தோற்றுவித்த ஈடு இணையிலாப் பெருங்கோயில் இராஜராஜேச்சுரம் பற்றிய ஆராய்ச்சி நூல்.

● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ●

## கிடைக்குமிடம்!

★ ★
★

தமிழ்நாடு அரசு

**தொல்பொருள் ஆய்வுத்துறை**

3/4, தெற்குக் கரைச் சாலை, சென்னை-28.

# DRISHTI VISHAM IN LEGEND, LITERATURE AND EPIGRAPHY

M. Arunachalam

*Drishti visham* is a serpent, which is said to possess the power of killing at sight, through a poison emitted from its eyes. On a first sight, this may appear to be fiction; but we shall see that it may not really be so.

*Manimekhalai* mentions the serpent *ditti vidam* in five places. The name is the Tamilised form *Drishti visham*. The story here regarding this serpent is that Rahula was bitten by the serpent drishti visham in a previous birth and was born in the next as Udayakumara, who makes love to Manimekhalai; she was in the previous birth born as Lakshmi, wife of Rahula.

The term *ditti vidam* is explained by the learned editor of *Manimekhalai*, Dr. Swaminatha Ayyar, in the following words: *Ditti vidam* is a serpent with poison in its eyes. It is also called the serpent having fire in its eyes. The princes of the Naga dynasty (Sindavamsa) are celebrated as those of the *Drishti visha* dynasty.[1] This serpent is said to possess such a poisonous power in its eyes that those who happen to look into them instantly die.[2]

The Velurpalayam plates of Nandivarman III mention a *drishti visham* dance of the king. The plates record a grant of the Pallava king in the Sanskrit language in his sixth regnal year (831 A.D.). Verse 9 in the grant runs as follows:

> Tatho ajayata Nandivarma
> anugrahat Yena Pinaka-paneh
> pranarttitah drishti vishah panindrah

The King Nandivarma danced the *drishti visha* dance of the *panindra* (the serpent king) by the grace of Pinakapani (Siva).

The term *drishti visha* occurring in this inscription is a rare one.

A Buddha Jataka story refers to the birth of the Buddha in a previous birth as this serpent. The commentary on *Nilakesi* mentions this and says: 'You were born as the *drishti visha* serpent; but afraid lest the living beings should die when they happened to look into your eyes, you never opened your eyes'.

*Dakshayagapparani* gives a very interesting story regarding this serpent. 'This serpent is worn as an armlet by Lord Siva. Its tongue was as wide as the milky ocean of Vishnu; its thickness was the depth of that

ocean. When Vishnu appeared in battle array before Virabhadra at the time of the destruction of the *yaga* of Daksha, he sent his milky ocean against Virabhadra: but the serpent *drishti visha,* lapped up all the ocean with one sweep of its tongue. Seeing this, Vishnu created in a moment one thousand milky oceans Now there was another such serpent which was relatively shorter in length. Its length was not sufficient so that its head and tail could be tied into a knot round the arm of Lord Siva, to form another armlet. So Siva opened its mouth, pushed its tail into the mouth and closed it shut. Afraid of Siva, the serpent would not open its mouth. So, when the thousand oceans advanced on Virabhadra, the serpent caused them to dry up, just by a look'.

Legends connected with the goddess Manasa have a bearing on *drishti visham*. Her story seems to be very popular in Bengal among the masses just like our Mariamman in Tamilnad. Manasa is the snake-goddess; the snake worship is widely prevalent amidst us also, and the *naga panchami* day (*Sravana sukla panchami*, the fifth day after new moon in the month of *sravana* August, September) is specially set apart in our country for the *naga* worship. The behaviour and venom-emitting power of Manasa seem to be akin to *drishti visham*. In the Manasa story, she is the daughter of Siva through Ganga. But Chandi is always jealous of her and in one quarrel 'Chandi lost her temper and jabbed a *kusa* needle into Manas's eye. Manasa took revenge by flashing her great power over Chandi from her other eye, Chandi fell down senseless.'[3] Both eyes of Manasa were poison eyes and at her will they were capable of inflicting death on the person; we should remember that Manasa was a serpent goddess. In the story it is said that at the request of Siva, Chandi was brought to life by Manasa again by another look. On another occasion after a quarrel, Chandi went near Manasa with the intent of kicking her. Again Manasa looked at her through the poison eye and Chandi fell down senseless. Evidently, after Chandi's pricking one eye of Manasa with a needle, that eye became a benevolent eye, while the other eye continued to be a poisonous eye.

Such are the stories and legends connected with the serpent, called the *drishti visham* The substance of these stories is borne out by facts relating to a species of the serpent cobra from the Central Africa. It is called there the Spitting Cobra. The following extract from an adventure book by a British author[4] will be of interest in this connection.

'Two white streams shot out from the snake's poison fangs like bullets fired from a double barrelled gun. Instead of losing their speed after going a foot or two, they covered the ten feet between the snake and boy in a fraction of a second and exactly hit their target-the eyes of the boy. The poison glands are just back of the fangs. Strong muscles shoot it out through the fangs. It works like a water pistol, except that it is a lot more accurate than a water pistol. The spitting cobra is the only creature on earth that carries a gun in its mouth. The poison when it comes into contact with the eye travels into the entire system and makes one totally blind. It can be nuetralised by a milk treatment every hour.'

(Continued in Page 4)

# திருச்சத்திமுற்றத்துத் திருஞானசம்பந்தன் திருமடம்

வித்துவான் வே. மகாதேவன்

திருப்பனந்தாள்

'நந்திபுரம்' 'நந்திபுரி' 'பழையாறை' 'முடிகொண்டசோழபுரம்' எனப் பல பெயர்களை உடையதாக விளங்கிய சோழருடைய இரண்டாந் தலைநகர் பழையாறை. பழையாறைப் பெருநகரின் பல பகுதிகளுள் 'திருச்சத்திமுற்றம்' என்னும் ஊரும் ஒன்று. கும்பகோணத்தில் இருந்து பேருந்து வண்டிகளின் வழியே பட்டீச்சுவரத்தை அடைந்து இவ்வூர்க் கோயிற்குச் செல்லலாம்.

## திருமடங்கள்

பழையாறை நகரில் சோழருடைய ஆட்சியின் பிற்காலத்தில் சில மடங்கள் இருந்தன. இச்சைவ மடங்கள் நாயன்மார்களின் திருநாமங்களால் அமைபவை. பட்டீச்சுவரம் திருக்கோயிலில் முதல் பலிபீடத்தில் காணப்படும் சோழர் காலத்துச் சிதைந்த கல்வெட்டொன்றில், *(261/1927)* திருஞானசம்பந்தன் திருமடம், திருநாவுக்கரசர் திருமடம், திருமூலதேவர் திருமடம், என்னும் பெயர்கள் குறிக்கப்பட்டுள்ளன. இத்திருமடங்களுள் திருஞானசம்பந்தர் மடம் வரலாற்றுச் சிறப்பு மிக்கது.

## திருச்சத்திமுற்றம்

'பழையாறை' என்னும் இராசதானியில் இருந்த திருச்சத்திமுற்றத்தில் திருஞானசம்பந்தர் திருமடம் இருந்தது. மூன்றும் இராசேந்திரசோழனின் பதினைந்தாவது ஆட்சியாண்டுக்குரிய தஞ்சைமாவட்டத்துக் குற்றாலத்துக் கல்லெழுத்துக்களுள் ஒன்று, "குலோத்துங்கசோழ வளநாட்டுக் கீழ்ப்பழையாறு ஆயின இராசராசபுரத்துத் திருச்சத்திமுற்றம் உடையார் கோயில் காமகோட்ட முடையார் கோயிற்கு அருகில் இருந்த மடத்துக்கு வீங்கு நீர்த்துருத்தி உடையார் சொன்ன வாறு அறிவார் கோயில் அதிகாரிகள் குடி இருப்பு மனை விற்றமை" கூறும். இக்கல்வெட்டான் அம்மன் கோயிலின் அருகில் ஒரு திருமடம் இருந்தமை உணர்கிறோம். இம்மடம் எது எனத் திருவீழிமிழலையில் உள்ள மூன்றும் இராசேந்திரனின் 23-ஆவது ஆண்டுக் கல்வெட்டு விளக்குகிறது. "இராசராசபுரத்துத் திருச்சத்திமுற்றமுடைய நாயனார் திருக்காமக்கோட்டமுடைய பெரிய நாச்சியார் கோயிற்குக் கிழக்கே அமைந்த திருஞானசம்பந்தன் திருமடத்துத் திருச்சத்திமுற்றத்து முதலியார் மரபினர் (பரிதிப்பெருமாள் சந்தானம்) ஆகிய தவப்பெருமாள் ஆயின ஞானசிவன் என்பார் அழகிய திருச்சிற்றம்பலமுடையார் மடத்துக்கு நிலக்கொடை தந்தமை கூறுகிறது. இக்கல்வெட்டால் இம்மடம் கோயிலின் கிழக்குப் பக்கம் இருந்தமை அறியலாம். *(495/1907* and *392/1908).*

## முதலியார் சந்தானம் (மரபு)

திருச்சத்திமுற்றத்தில் இருந்த இம்மடத்தினர் திருச்சத்திமுற்றத்து முதலியார் பரம்பரையினராவர். இவர் சோழவேந்தரின் குருமார்களாக திகழ்ந்தவர். இம்மரபினரின் ஆட்சியில் தமிழகத்தில் பல மடங்கள் இருந்துள்ளன.

# திருச்சத்திமுற்றத்துத் திருஞானசம்பந்தன் திருமடம்

வித்துவான் வே. மகாதேவன்

திருப்பனந்தாள்

'நந்திபுரம்' 'நந்திபுரி' 'பழையாறை' 'முடிகொண்டசோழபுரம்' எனப் பல பெயர்களை உடையதாக விளங்கிய சோழருடைய இரண்டாந் தலைநகர் பழையாறை. பழையாறைப் பெருநகரின் பல பகுதிகளுள் 'திருச்சத்திமுற்றம்' என்னும் ஊரும் ஒன்று. கும்பகோணத்தில் இருந்து பேருந்து வண்டிகளின் வழியே பட்டீச்சுவரத்தை அடைந்து இவ்வூர்க் கோயிற்குச் செல்லலாம்.

## திருமடங்கள்

பழையாறை நகரில் சோழருடைய ஆட்சியின் பிற்காலத்தில் சில மடங்கள் இருந்தன. இச்சைவ மடங்கள் நாயன்மார்களின் திருநாமங்களால் அமைபவை. பட்டீச்சுவரம் திருக்கோயிலில் முதல் பலிபீடத்தில் காணப்படும் சோழர் காலத்துச் சிதைந்த கல்வெட்டொன்றில், *(261/1927)* திருஞானசம்பந்தன் திருமடம், திருநாவுக்கரசர் திருமடம், திருமூலதேவர் திருமடம், என்னும் பெயர்கள் குறிக்கப்பட்டுள்ளன. இத்திருமடங்களுள் திருஞானசம்பந்தர் மடம் வரலாற்றுச் சிறப்பு மிக்கது.

## திருச்சத்திமுற்றம்

'பழையாறை' என்னும் இராசதானியில் இருந்த திருச்சத்திமுற்றத்தில் திருஞானசம்பந்தர் திருமடம் இருந்தது. மூன்றும் இராசேந்திரசோழனின் பதினைந்தாவது ஆட்சியாண்டுக்குரிய தஞ்சைமாவட்டத்துக் குற்றாலத்துக் கல்லெழுத்துக்களுள் ஒன்று, "குலோத்துங்கசோழ வளநாட்டுக் கீழ்ப்பழையாறு ஆயின இராசராசபுரத்துத் திருச்சத்திமுற்றம் உடையார் கோயில் காமகோட்ட முடையார் கோயிற்கு அருகில் இருந்த மடத்துக்கு வீங்கு நீர்த்துருத்தி உடையார் சொன்னவாறு அறிவார் கோயில் அதிகாரிகள் குடி இருப்பு மனை விற்றமை" கூறும். இக்கல்வெட்டான் அம்மன் கோயிலின் அருகில் ஒரு திருமடம் இருந்தமை உணர்கிறோம். இம்மடம் எது எனத் திருவீழிமிழலையில் உள்ள மூன்றும் இராசேந்திரனின் 23-ஆவது ஆண்டுக் கல்வெட்டு விளக்குகிறது. "இராசராசபுரத்துத் திருச்சத்திமுற்றமுடைய நாயனர் திருக்காமக்கோட்டமுடைய பெரிய நாச்சியார் கோயிற்குக் கிழக்கே அமைந்த திருஞானசம்பந்தன் திருமடத்துத் திருச்சத்திமுற்றத்து முதலியார் மரபினர் (பரிதிப்பெருமாள் சந்தானம்) ஆகிய தவப்பெருமாள் ஆயின ஞானசிவன் என்பார் அழகிய திருச்சிற்றம்பலமுடையார் மடத்துக்கு நிலக்கொடை தந்தமை கூறுகிறது. இக்கல்வெட்டால் இம்மடம் கோயிலின் கிழக்குப் பக்கம் இருந்தமை அறியலாம். *(495/1907 and 392/1908).*

## முதலியார் சந்தானம் (மரபு)

திருச்சத்திமுற்றத்தில் இருந்த இம்மடத்தினர் திருச்சத்திமுற்றத்து முதலியார் பரம்பரையினராவர். இவர் சோழவேந்தரின் குருமார்களாக திகழ்ந்தவர். இம்மரபினரின் ஆட்சியில் தமிழகத்தில் பல மடங்கள் இருந்துள்ளன.

1. திருச்சிமாவட்டம் திருப்பலாத்துறையில் உள்ள இராசகேசரி மூன்றும் இராசராசனின் இருபத்திரண்டாம் ஆண்டுக் கல்வெட்டு, 'திருவானைக்காவில் இருந்த நாற்பத்தெண்ணாயிரவன் திருமடம்' திருச்சத்திமுற்றத்து முதலியார் சந்தானத்துப் பிரிவினது எனக் கூறுகிறது. *(586/1908).*

2. இராசேந்திரனின் இருபதாமாண்டு வலிவலம் கல்வெட்டு 'வலிவலத்து மனத்துள்நாயனார் கோயிலின் தென்புறத்தில் இருந்த தவப்பெருமாள் திருமடத்தின் தலைவராகிய 'எதிரொப்பிலாதார் சோமநாத முதலியார்' என்பவர் திருச்சத்திமுற்றத்து முதலியார் சந்தானத்தைச் சேர்ந்தவர் எனக் கூறுகிறது *(109/1911).*

3. கோவிலூர்க் கல்வெட்டு ஒன்று. 'இவ்வூர்க் கோயிலின் மேற்கே இருந்த கூத்தாடும் நாயனார் திருமடத்துக்குத் தலைவராக இருந்த ''பரிபூரண சைவாசாரியார்'' இம்மரபினர் எனவும், மற்றொரு கல்வெட்டு, இம்மரபினராகிய ஈசான சிவாசாரியார் இக்கோயிலில் அழகிய திருச்சிற்றம்பலமுடைய நாயனாரை எழுந்தருளுவித்து நிவந்தங்கள் தந்தார்' எனவும் கூறுகிறது. இக்கல்வெட்டுக்களில் அரசன் பெயர் சிதைந்துள்ளது. *(218, 220/1908).*

இத்தகைய கல்வெட்டுச் சான்றுகளால் இம்மரபினர் பல மடங்களின் தலைமைப் பொறுப்பேற்று நிலைவியமை புலனாகும்.

## வரலாற்று எச்சமா ?

திருப்பனந்தாள் தமிழக வரலாற்றுப் பேரவை 29-4-74 அன்று திருச்சத்திமுற்றத்தில் வரலாற்றாய்வுகள் செய்தது. திருச்சத்திமுற்றம் திருக்கோயிலின் கிழக்குப் புறம் இடிந்து கிடக்கும் கட்டடப் பகுதி ஒன்று இருக்கிறது. இப்பகுதி மிக நீண்ட பகுதி. தொடக்கப் பகுதியிலும் இறுதிப் பகுதியிலுமாகச் சுமார் நாற்பது தூண்கள் இருக்கின்றன. மேன்மறைப்பும் இல்லாமல் பெரும் பகுதி காணப்படுகிறது. முன்புறத்து மேற்குப் பக்கமும் சுவரிருந்தமைக்குரிய சான்றுகள் இன்றும் காணப்படுவதனால் இது மண்டபம் அன்று என்பது உறுதி. இது திருச்சத்திமுற்றத் திருஞானசம்பந்தர் மடமாக இருக்கக் கூடும்.

---

*(Continued from Page 2)*

It is probably this species of cobra which is still existing in other countries that had been known in our literary legends as the *drishti visham*: it might have been so called because it directs its poison at the eyes of man and makes him totally blind.

---

1. Epigraphia Indica, Volume III; page 232.
2. See also the story of Jason in Greek mythology where any one who looked at the eyes of the Medusa, was instantly turned to stone.
3. My attention to the Manasa cult was drawn by Sri R. Nagaswamy, Director of Archaeology. Vide page 80, 88 of the Historical studies in the cult of the Goddess Manasa by Dr P. K. Maity, 1966.
4. Willare price, Gorilla Adventure 1969 pages 141-3; Knight Books.

# வல்லம் ஏகௌரியம்மன் கோயில்

திரு. நடன. காசிநாதன், எம்.ஏ.,
பதிவு அலுவலர், தஞ்சை

தஞ்சையிலிருந்து திருச்சி செல்லும் சாலையில் 12 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள வல்லம், முன்பு முத்தரையர் தலைநகராகத் திகழ்ந்தது. அங்கிருந்து ஆலங்குடி செல்லும் வழியில் மூன்று கிலோ மீட்டர் தொலைவில் சாலையின் மேற்குப் பக்கத்தில் ஏகௌரியம்மன் ஆலயம் அமைந்துள்ளது.

## திருச்சுற்றும் கோபுரமும்

இரு திருச்சுற்று மதில்கள் உள்ளன. முதற் திருச்சுற்றின் நுழைவாயிலில் நல்லநிலையிலான கோபுரம் ஒன்றும், இரண்டாம் திருச்சுற்று நுழைவாயிலில் சிதைந்த அடிப்பகுதி மட்டும் எஞ்சிய கோபுரம் ஒன்றும் உள்ளன. நாயக்கர் காலத்தைச் சார்ந்த ஒரு முன்மண்டபமும் உள்ளது.

## சிற்பங்கள்

மண்டபத்தில் முதலாம் பராந்தகன் காலத்தைச் சார்ந்த விநாயகர் சிற்பம் ஒன்றும், சண்டேசுரர் சிற்பம் ஒன்றும் உள்ளன. மற்றொரு சண்டேசுரரின் சிற்பம் இராஜராஜன் காலத்தியதாயிருக்கலாம். இவை தவிர இரு உடைந்த தலைகள் 13-14 ஆம் நூற்றுண்டைச் சார்ந்தனவாக உள. முன் மண்டபத்தில் ஒன்றும் இரண்டாம் திருச்சுற்றில் ஒன்றுமாக இரு முருகன் சிற்பங்கள் உள்ளன.

## செப்புத்திருமேனி

இக்கோயிலின் மூலநாயகியைப் போன்றதொரு திருமேனி முத்துக் கண் மாரியம்மன் கோயிலில் பாதுகாக்கப்படுகிறது. பத்மபீடத்தின் மீது அமர்ந்து எண்கரங்களுடன் தேவி காட்சியளிக்கிறாள். பீடத்தில் ஐந்து அரக்கர்களின் தலைகள் உள்ளன. "வழியடுமைக் கொண்ட குமரன் உகந்தடுமை சதாசேவை" என்று அந்த பீடத்தில் பொறிக்கப்பட்டுள்ளது. எழுத்தமைதியையும், உருவத்தையும் கொண்டு இதை 14-15 நூற்றுண்டின தாகக் கணிக்கலாம்.

## கல்வெட்டுக்கள்

அர்த்தமண்டபத்து நுழைவாயிலின் இரண்டு நிலைகளிலும் மொத்தம் மூன்று கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. நுழைவாயிலின் வலப்பக்க நிலையில் இரு கல்வெட்டுக்கள் உள்ளன. ஒன்று பராந்தகனின்

40-ஆம் ஆட்சி ஆண்டைச் சார்ந்தது. மற்றொரு கல்வெட்டின் முக்காற் பகுதி திருப்பணி செய்வோரால் மறைக்கப்பட்டு விட்டது. முழுமையாக உள்ள கல்வெட்டு வாசகம் :- 'ஸ்வஸ்தி ஸ்ரீ மதிரையும் ஈழமும் கொண்ட கோப்பரகேசரி பன்மர்க்கி யாண்டு கம ஆவது எரியூர் நாட்டு வடகுளத் துறுப்பாடித் துறுப்பாடி உடையான் அனந்தங்காரியாகிய பிராந்தக முத்தரையன் வல்லத்து பஷ்ட்டாரகிக்கு வைச்ச நொந்தா விளக்கொன்று ஒன்றுக்கும் இஞ்ஞாட்டுப் பாட்டத்தாளன் குவாவம் பிரமனுக்கடுத்த ஆடு தொண்ணூற்றுறுங் கொண்டு சந்திராதித்தவலமும் நிசதம் உழக்கு நெய் யட்டுவேனுனேன் குவாவம் பிரம்மனேன் இவை பன்மாயேஸ்வரரிரக்ஷை.[1]

எரியூர் நாட்டைச்சார்ந்த வடகுளம் என்னும் ஊரில் அடங்கியுள்ள துறுப்பாடி என்ற சிற்றூரைச் சார்ந்த அனந்தங்காரி என்னும் பிராந்தக முத்தரையன் என்பான் வல்லத்திலுள்ள பட்டாரகிக்கு நொந்தா விளக்கு ஒன்று எரிப்பதற்கு எரியூர் நாட்டைச் சேர்ந்த பாட்டத்தாளம் என்னும் ஊரில் உள்ள குவாவம் பிரமனிடம் தொண்ணூற்றுறு ஆடு கொடுத்து ஒவ்வொரு நாளும் நெய் அளிப்பதற்கு ஏற்பாடு செய்ததை இக்கல்வெட்டு குறிக்கிறது.

அர்த்த மண்டபத்தூண் ஒன்றில் முதலாம் இராஜராஜன் கல்வெட்டு ஒன்று வண்ணம் பூசப்பெற்று படிக்க இயலாநிலையில் உள்ளது. 'திருமகள் போல' எனத்தொடங்கும் இக்கல்வெட்டு, கோவிராஜ ராஜ ராஜகேசரி பந்மர்க்கு யாண்டு யரு-ஆவது எரியூர் நாட்டு கருவுகல வல்லத்து காளாபிடாரி கைதலைபூசல் நங்கைக்கு உடையார் விண்ணனேரி பகலிருக்கைப் பள்ளிக்கட்டிலில் எழுந்தருளி இருக்கச் சூரலூர்க் கூற்றத்துச் சூரலூர் கிழவன் கம்பன் மணியனை விக்கிரமசிங்கனும் வல்லத்து வேளான்(னும்) விண்ணப்பத்தால் . . . .[2] என்று தொடர்கிறது.

சிலர் விண்ணப்பம் செய்ததற்கிணங்க, இராஜராஜன் அளித்த கொடையை இது குறிக்கிறது. பராந்தகன் காலத்தில் வெறும் பிடாரி என்று குறிக்கப்பட்ட தெய்வம், இராஜராஜன் காலத்தில் காளாபிடாரி கைதலை பூசல் நங்கை என்று வழங்கப்பட்டிருக்கிறது.

*உண்ணாழி*

பீடத்தின் மீது அவ்வப்போது திருப்பணிகள் செய்யப் பெற்ற காளியின் சுதையுருவம் வண்ணம் பூசப்பெற்று விளங்குகிறது. நான்கடி உயரத்தில் எட்டுக்கரங்களோடு வீற்றிருக்கும் அன்னையின் இடக்கீழ் கையில் அரக்கனின் துண்டிக்கப் பெற்ற தலை, குருதி சொட்டச் சொட்டக் காட்சி அளிக்கிறது.

*தற்காலத்தன*

இரண்டாம் திருச்சுற்றில் காத்தான், இலாட சந்நியாசி, மதுரை வீரன், கறுப்பு ஆகிய தெய்வங்களின் சந்நிதிகளும், குதிரை மீதமர்ந்த வீரன் சிற்பமும் உள்ளன.

# உடுக்கைப் பாட்டு

திரு. கு. தாமோதரன் எம். ஏ.,

பதிவு அலுவலர்,

சோழ மன்னன் விசயாலயன் காலந்தொட்டு சக்தி வழிபாடு தஞ்சைத் தரணியில் தழைத்து வந்திருக்கிறது. இதற்கு அடையாளமாகத் தஞ்சை வட்டத்தில் உள்ள பெரும்பான்மையான ஊர்களில் அன்னையர் எழுவர்க்கும் கோயில்கள் எடுக்கப்பட்டுள்ளன. அரசன் முதல் மக்கள் வரை அனைவரும் நோய்நொடியின்றி வாழவும், நாட்டில் வளம் பெருகவும், எல்லா வகையிலும் வெற்றிகிட்டவும் ஆண்டு தோறும் சக்தியின் வடிவமாக உள்ள அன்னையர்க்கு விழா எடுத்து மகிழ்ந்தனர்.

இதுபோன்ற விழா இன்றும் நடைபெற்று வருவதற்குச் சான்றாக விளங்குகிறது மாத்தூர். தஞ்சையிலிருந்து கும்பகோணம் செல்லு நெடுஞ்சாலையில் அய்யம்பேட்டைக்கு மேற்கே சுமார் மூன்று கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ளது இவ்வழகிய சிற்றூர். இங்கு வடுவாயி அம்மனுக்குக் கோயில் எடுக்கப்பட்டுள்ளது. இக்கோயிலில் ஒரே கல்லில் அன்னையர் எழுவரும் அன்பே வடிவமாக காட்சி அளிக்கின்றனர். அன்னையர் எழுவருக்கும் சேர்த்து ஒரே கோயிலாக எடுத்தாலும், ஊர் மக்கள் அரவமடக்கி அம்மன் கோயில், மாரியம்மன் கோயில், செல்லி அம்மன் கோயில், பொன்னி அம்மன் கோயில், பச்சையம்மன் கோயில் என்று தனித்தனிப் பெயரிட்டே அழைக்கின்றனர். இதே போன்று இங்கு அன்னையர் எழுவர் கோயில் வடுவாயி அம்மன் கோயில் என்று அழைக்கப்படுகிறது.

## திருவிழாவும் வழிபாடும்

அன்னையர் எழுவருக்கும் ஆண்டு தோறும் சித்திரைத் திங்களில் விழா எடுக்கப்படுகிறது. அப்போது தேரோட்டமும் உண்டு. கார்த்திகைத் திங்கள் செவ்வாய்க் கிழமையில் ஊர் மக்கள் அனைவரும் ஒன்று கூடி வடுவாயி அம்மனுக்குப் பொங்கலிட்டு மாவிளக்கு வைத்து வழிபடுகின்றனர். இந்தப் பொங்கலை ஊருணிப் பொங்கல் என்று அழைக்கின்றனர். வழிபடும் பொழுது கோயில் பூசாரி பயபக்தியுடன் நெற்றியில் விபூதி பூசி, கழுத்தில் மாலை அணிந்து, அரையில் மட்டும் ஆடை உடுத்தி, கையில் உடுக்கை ஏந்தி பக்தியின் முழு உருவமாகக் காட்சி அளிப்பான். பிறகு பாடவேண்டிய தோத்திரப் பாடலை நல்ல இசையுடன் உடுக்கை அடித்துக் கொண்டு பாட ஆரம்பிப்பான். அப்படி பாடும் பொழுது சாமியிடம் வரங்கேட்டல் மரபாகும். அன்னையை நினைத்து மெய்யுருகப் பாடும்பொழுது பூசாரிக்கு மருள் வந்து (சாமி வந்து) அவர் வாய் மூலம் வரங் கிடைக்கும் என்பது நம்பிக்கை.

## கருப்பண்ணனை வணங்குதல்

அருள் பாலிக்கும் அன்னையாம் வடுவாயி அம்மனை வழிபடுவதற்கு முன்னர், அவனுடைய வாசலில் காவல் புரியும் கருப்பண்ணனை வணங்குகிறான். அப்படி வணங்கும்பொழுது கருப்பண்ணனின் முழு உருவையும் நமக்குப் படம் பிடித்துக் காட்டுகின்றான் பூசாரி. கட்டாரி, கேடயம் ஆகியவற்றைக்கையில் ஏந்தியும், காலில் மணிகளை அணிந்தும், சரிகை முண்டாசு அணிந்தும், மார்பில் பதக்கமும்,

40-ஆம் ஆட்சி ஆண்டைச் சார்ந்தது. மற்றொரு கல்வெட்டின் முக்காற் பகுதி திருப்பணி செய்வோரால் மறைக்கப்பட்டு விட்டது. முழுமையாக உள்ள கல்வெட்டு வாசகம் :- 'ஸ்வஸ்தி ஸ்ரீ மதிரையும் ஈழமும் கொண்ட கோப்பரகேசரி பன்மர்க்கி யாண்டு கம ஆவது எரியூர் நாட்டு வடகுளத் துறுப்பாடி துறுப்பாடி உடையான் அனந்தங்காரியாகிய பிராந்தக முத்தரையன் வல்லத்து பஷ்ட்டாரகிக்கு வைச்ச நொந்தா விளக்கொன்று ஒன்றுக்கும் இஞ்நாட்டுப் பாட்டத்தாளன் குவாவம் பிரமனுக்கடுத்த ஆடு தொண்ணூற்றுறுங் கொண்டு சந்திராதித்தவலமும் நிசதம் உழக்கு நெய் யட்டுவேனனேன் குவாவம் பிரம்மனேன் இவை பன்மாயேஸ்வரரிரக்ஷை.[1]

எரியூர் நாட்டைச்சார்ந்த வடகுளம் என்னும் ஊரில் அடங்கியுள்ள துறுப்பாடி என்ற சிற்றூரைச் சார்ந்த அனந்தங்காரி என்னும் பிராந்தக முத்தரையன் என்பான் வல்லத்திலுள்ள பட்டாரகிக்கு நொந்தா விளக்கு ஒன்று எரிப்பதற்கு எரியூர் நாட்டைச் சேர்ந்த பாட்டத்தாளம் என்னும் ஊரில் உள்ள குவாவம் பிரமனிடம் தொண்ணூற்றுறு ஆடு கொடுத்து ஒவ்வொரு நாளும் நெய் அளிப்பதற்கு ஏற்பாடு செய்ததை இக்கல்வெட்டு குறிக்கிறது.

அர்த்த மண்டபத்தூண் ஒன்றில் முதலாம் இராஜராஜன் கல்வெட்டு ஒன்று வண்ணம் பூசப்பெற்று படிக்க இயலாநிலையில் உள்ளது. 'திருமகள் போல' எனத்தொடங்கும் இக்கல்வெட்டு, கோவிராஜ ராஜ ராஜகேசரி பந்மர்க்கு யாண்டு யரு-ஆவது எரியூர் நாட்டு கருவுகல வல்லத்து காளாபிடாரி கைதலைபூசல் நங்கைக்கு உடையார் விண்ணனேரி பகவிருக்கைப் பள்ளிக்கட்டிலில் எழுந்தருளி இருக்கச் சூரலூர்க் கூற்றத்துச் சூரலூர் கிழவன் கம்பன் மணியனை விக்கிரமசிங்கனும் வல்லத்து வேளான்(னும்) விண்ணபத்தால் . . . .[2] என்று தொடர்கிறது.

சிலர் விண்ணப்பம் செய்ததற்கிணங்க, இராஜராஜன் அளித்த கொடையை இது குறிக்கிறது. பராந்தகன் காலத்தில் வெறும் பிடாரி என்று குறிக்கப்பட்ட தெய்வம், இராஜராஜன் காலத்தில் காளாபிடாரி கைதலை பூசல் நங்கை என்று வழங்கப்பட்டிருக்கிறது.

உண்ணாழி

பீடத்தின் மீது அவ்வப்போது திருப்பணிகள் செய்யப் பெற்ற காளியின் சுதையுருவம் வண்ணம் பூசப்பெற்று விளங்குகிறது. நான்கடி உயரத்தில் எட்டுக்கரங்களோடு வீற்றிருக்கும் அன்னையின் இடக்கீழ் கையில் அரக்கனின் துண்டிக்கப் பெற்ற தலை, குருதி சொட்டச் சொட்டக் காட்சி அளிக்கிறது.

சுற்றாலத்தன

இரண்டாம் திருச்சுற்றில் காத்தான், இலாட சந்நியாசி, மதுரை வீரன், கறுப்பு ஆகிய தெய்வங்களின் சந்நிதிகளும், குதிரை மீதமர்ந்த வீரன் சிற்பமும் உள்ளன.

(தொடர்ச்சி 12-ம் பக்கம்)

# உடுக்கைப் பாட்டு

திரு. கு. தாமோதரன் எம். ஏ.,
பதிவு அலுவலர்,

சோழ மன்னன் விசயாலயன் காலந்தொட்டு சக்தி வழிபாடு தஞ்சைத் தரணியில் தழைத்து வந்திருக்கிறது. இதற்கு அடையாளமாகத் தஞ்சை வட்டத்தில் உள்ள பெரும்பான்மையான ஊர்களில் அன்னையர் எழுவர்க்கும் கோயில்கள் எடுக்கப்பட்டுள்ளன. அரசன் முதல் மக்கள் வரை அனைவரும் நோய்நொடியின்றி வாழவும், நாட்டில் வளம் பெருகவும், எல்லா வகையிலும் வெற்றிகிட்டவும் ஆண்டு தோறும் சக்தியின் வடிவமாக உள்ள அன்னையர்க்கு விழா எடுத்து மகிழ்ந்தனர்.

இதுபோன்ற விழா இன்றும் நடைபெற்று வருவதற்குச் சான்றாக விளங்கு கிறது மாத்தூர். தஞ்சையிலிருந்து கும்பகோணம் செல்லு நெடுஞ்சாலையில் அய்யம்பேட்டைக்கு மேற்கே சுமார் மூன்று கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ளது இவ்வழகிய சிற்றூர். இங்கு வடுவாயி அம்மனுக்குக் கோயில் எடுக்கப்பட்டுள்ளது. இக்கோயிலில் ஒரே கல்லில் அன்னையர் எழுவரும் அன்பே வடிவமாக காட்சி அளிக்கின்றனர். அன்னையர் எழுவருக்கும் சேர்த்து ஒரே கோயிலாக எடுத்தாலும், ஊர் மக்கள் அரவமடக்கி அம்மன் கோயில், மாரியம்மன் கோயில், செல்லி அம்மன் கோயில், பொன்னி அம்மன் கோயில், பச்சையம்மன் கோயில் என்று தனித்தனிப் பெயரிட்டே அழைக்கின்றனர். இதே போன்று இங்கு அன்னையர் எழுவர் கோயில் வடுவாயி அம்மன் கோயில் என்று அழைக்கப்படுகிறது.

## திருவிழாவும் வழிபாடும்

அன்னையர் எழுவருக்கும் ஆண்டு தோறும் சித்திரைத் திங்களில் விழா எடுக்கப்படுகிறது. அப்போது தேரோட்டமும் உண்டு. கார்த்திகைத் திங்கள் செவ்வாய்க் கிழமையில் ஊர் மக்கள் அனைவரும் ஒன்று கூடி வடுவாயி அம்மனுக்குப் பொங்கலிட்டு மாவிளக்கு வைத்து வழிபடுகின்றனர். இந்தப் பொங்கலை ஊருணிப் பொங்கல் என்று அழைக்கின்றனர். வழிபடும் பொழுது கோயில் பூசாரி பயபக்தியுடன் நெற்றியில் விபூதி பூசி, கழுத்தில் மாலை அணிந்து, அரையில் மட்டும் ஆடை உடுத்தி, கையில் உடுக்கை ஏந்தி பக்தியின் முழு உருவமாகக் காட்சி அளிப்பான். பிறகு பாடவேண்டிய தோத்திரப் பாடலை நல்ல இசையுடன் உடுக்கை அடித்துக் கொண்டு பாட ஆரம்பிப்பான். அப்படி பாடும் பொழுது சாமியிடம் வரங்கேட்டல் மரபாகும். அன்னையை நினைத்து மெய்யுருகப் பாடும்பொழுது பூசாரிக்கு மருள் வந்து (சாமி வந்து) அவர் வாய் மூலம் வரம் கிடைக்கும் என்பது நம்பிக்கை.

## கருப்பண்ணனை வணங்குதல்

அருள் பாலிக்கும் அன்னையாம் வடுவாயி அம்மனை வழிபடுவதற்கு முன்னர், அவனுடைய வாசலில் காவல் புரியும் கருப்பண்ணனை வணங்குகிறான். அப்படி வணங்கும்பொழுது கருப்பண்ணனின் முழு உருவையும் நமக்குப் படம் பிடித்துக் காட்டுகின்றான் பூசாரி. கட்டாரி, கேடயம் ஆகியவற்றைக்கையில் ஏந்தியும், காலில் மணிகளை அணிந்தும், சரிகை முண்டாசு அணிந்தும், மார்பில் பதக்கமும்,

அத்துடன் சேர்ந்தாற் போன்ற ஆரமும் இடுப்பில் ஒட்டியாணமும், சல்லியும் அணிந்து, கார்மேகம் போன்ற வண்ணத்தையும், கருணை உள்ளத்தையும் கொண்டவனே, அண்ணனே, கருப்பண்ணனே வருக வருக என்று அழைக்கிறன்.

கட்டாரி கேடயம் கலி மணிகள் ஓசையிலும்
கலீர் கலீர் எங்க இந்த வட்டமதிலிட்ட
வடசரிகை மிண்டாசியும் மாரு பதக்கமும்
பதைக்க முடாரமும் பல்கின்ற ஒட்டியும்
ஒட்டியும் சல்லியும் ஊட்டிய உறைந்திட
கட்டுக் கடங்காத கார்மேக வருணனே
வருணனே கருணனே எங்கள் நீலி
கொடுமை ஆயி வாசலில் விளங்கிவரும்
அண்ணு கருப்பண்ணு வா ! வா !! வா !!!

## வடுவாயி அம்மனை வணங்குதல்

கருப்பண்ணனுக்கு அன்னையாகவும், அருள் பாலிக்கும் தேவியாகவும் வாட்டம் கொண்ட மக்களுக்கு வாழ்வளிக்கும் வடிவமாம் வடுவாயி அம்மனை, அடுத்து வணங்குகிறன். அப்பொழுது அன்னையர் எழுவரின் சிறப்பு இயல்புகளையும், பெருமைகளையும் புகழ்ந்து பாடுகிறன். பிராம்மி மகேஸ்வரி, கௌமாரி, வைஷ்ணவி, வாராகி, இந்திராணி, சாமுண்டி ஆகிய எழுவரும் ஒன்று கூடிப் பாலாற்றங்கரையில் தபசு இருந்ததையும், மற்ெருரு சமயம் கங்கைக் கரையில் ஆற்று மணலெடுத்துச் சிவபெருமானைச் செய்து பூக்களைச் சொரிந்து தபசு இருந்த வரலாற்றையும் கூறுகிறன். பின்னர் மணமோடு என்ற இடத்திற்குச் சென்று அமர்ந்தாள் அவளை மாத்தூருக்கு வந்து அருள் செய்யும்படி வேண்டுகிறன்.

சரணம் சரணமம்மா சாட்சே திருமுடியே
மூக்கால் சரணமென்ன முடிவணங்கித் தண்டனிட்டேன்
நாக்கால் சரணமென்ன நமஸ்கரிச்சித் தண்டனிட்டேன்
அக்காளும் தங்கையரும் ஐந்திரண்டு ஏழு பேரும்
ஏழ்வரும் கூடி அமர்ந்து பாலாத்தங்கரையில் என்தாயே
பாரத் தவசிருந்தாள் ஆத்து மணலெடுத்து அரனை
உண்டு பண்ணி சேத்து மணலெடுத்துச் சிவனை
உண்டு பண்ணி கங்கை நதிக்கரையில் இருந்தாயே
பெருந் தவசு தோட்டந் திறந்து மல்லா
தொன்னை தைத்துப் பூ வெடுத்து வாடி திறந்து மல்லா
வருண லட்சம் பூவெடுத்து கொண்டு வந்த பூவுகளை
கட கட வென்றுதான் சொரிந்து
இருந்தாயே பெருந்தவசு ஆதியிலே சூலமங்கை
அமர்ந்தாளே மணமோடு மணமோட்டில் அமர்ந்திருக்கும்
மகராசி வந்தமரும்.

## பாலன் வருத்தம்

அன்னையின் பெருமைகளையும், சிறப்பியல்புகளையும் நீண்ட நேரம் பாடியும் அவள் வரவில்லையே என்ற ஏக்கத்தில் குழந்தையைப்போலக் கதறி அழுகிறன் ஒரு வேளை அவன் அழும் குரல் அவளுக்கு கேட்கவில்லையா? அல்லது கேட்டும் அவள் மனம் கரையாமலிருக்க அவள் உள்ளம் கல்லோ? அல்லது இரும்போ? என்று வருந்துகிறன்.

அத்துடன் சேர்ந்தாற் போன்ற ஆரமும் இடுப்பில் ஒட்டியாணமும், சல்லியும் அணிந்து, கார்மேகம் போன்ற வண்ணத்தையும், கருணை உள்ளத்தையும் கொண்டவனே, அண்ணனே, கருப்பண்ணனே வருக வருக என்று அழைக்கிறன்.

கட்டாரி கேடயம் கலி மணிகள் ஓசையிலும்
கலீர் கலீர் எங்க இந்த வட்டமதிலிட்ட
வடசரிகை மிண்டாசியும் மாரு பதக்கமும்
பதைக்க முடாரமும் பல்கின்ற ஒட்டியும்
ஒட்டியும் சல்லியும் ஊட்டிய உறைந்திட
கட்டுக் கடங்காத கார்மேக வருணனே
வருணனே கருணனே எங்கள் நீலி
கொடுமை ஆயி வாசலில் விளங்கிவரும்
அண்ணு கருப்பண்ணு வா ! வா !! வா !!!

## வடுவாயி அம்மனை வணங்குதல்

கருப்பண்ணனுக்கு அன்னையாகவும், அருள் பாலிக்கும் தேவியாகவும் வாட்டம் கொண்ட மக்களுக்கு வாழ்வளிக்கும் வடிவமாம் வடுவாயி அம்மனை அடுத்து வணங்குகிறன். அப்பொழுது அன்னையர் எழுவரின் சிறப்பு இயல்புகளையும், பெருமைகளையும் புகழ்ந்து பாடுகிறன். பிராம்மி, மகேஸ்வரி, கௌமாரி, வைஷ்ணவி, வாராகி, இந்திராணி, சாமுண்டி ஆகிய எழுவரும் ஒன்று கூடிப் பாலாற்றங்கரையில் தபசு இருந்ததையும், மற்றொரு சமயம் கங்கைக் கரையில் ஆற்று மணலெடுத்துச் சிவபெருமானைச் செய்து பூக்களைச் சொரிந்து தபசு இருந்த வரலாற்றையும் கூறுகிறன். பின்னர் மணமோடு என்ற இடத்திற்குச் சென்று அமர்ந்தாள் அவளை மாத்தூருக்கு வந்து அருள் செய்யும்படி வேண்டுகிறன்.

சரணம் சரணமம்மா சாட்சே திருமுடியே
மூக்கால் சரணமென்ன முடிவணங்கித் தண்டனிட்டேன்
நாக்கால் சரணமென்ன நமஸ்கரிச்சித் தண்டனிட்டேன்
அக்காளும் தங்கையரும் ஐந்திரண்டு ஏழு பேரும்
ஏழ்வரும் கூடி அமர்ந்து பாலாத்தங்கரையில் என்தாயே
பாரத் தவசிருந்தாள் ஆத்து மணலெடுத்து அரனை
உண்டு பண்ணி சேத்து மணலெடுத்துச் சிவனை
உண்டு பண்ணி கங்கை நதிக்கரையில் இருந்தாயே
பெருந் தவசு தோட்டந் திறந்து மல்லா
தொன்னை தைத்துப் பூ வெடுத்து வாடி திறந்து மல்லா
வருண லட்சம் பூவெடுத்து கொண்டு வந்த பூவுகளை
கட கட வென்றுதான் சொரிந்து
இருந்தாயே பெருந்தவசு ஆதியிலே சூலமங்கை
அமர்ந்தாளே மணமோடு மணமோட்டில் அமர்ந்திருக்கும்
மகராசி வந்தமரும்.

## பாலன் வருத்தம்

அன்னையின் பெருமைகளையும், சிறப்பியல்புகளையும் நீண்ட நேரம் பாடியும் அவள் வரவில்லையே என்ற ஏக்கத்தில் குழந்தையைப்போலக் கதறி அழுகிறன் ஒரு வேளை அவன் அழும் குரல் அவளுக்கு கேட்கவில்லையா? அல்லது கேட்டும் அவள் மனம் கரையாமலிருக்க அவள் உள்ளம் கல்லோ? அல்லது இரும்போ? என்று வருந்துகிறன்.

வரன் சாறபூம —

பாலன் வருந்துரது பார்வதிக்குக் கேட்கலேயா
குழந்தை வருந்துரது உன் கோவிலுக்குக் கேட்கலேயா
மைந்தன் வருந்துரது மகராசிக்குக் கேட்கலேயா
கல்லோடி உன்மனது கரையலேயா எள்ளளவும்
இரும்போடி உன்மனது இரங்கலேயா எள்ளளவும்.

## காட்டிக் கொடுக்காமல் கருணை புரிவாய் தாயே

ஊர் மக்கள் அனைவரும் ஒன்றுகூடி இருக்கும் இந்த வேளையில் பூசாரி மெய் யுருகப் பாடுகிறான். இருந்தும் அவள் வரவில்லை. எனவே பூசாரிக்கு அச்சம் மேலிட்டு, தன்னை மக்களிடம் காட்டிக் கொடுக்க நினைத்து எங்கேயோ சென்று விட்டாளோ? அப்படிச் சென்றிருந்தாலும் உடனடியாக வருவாள் என்று நம்பு கிறான். வந்து மக்களுக்கு நல்ல வார்த்தை சொல்ல வேண்டுகிறான். இங்கு நடைபெறுகிற விழா முடிந்து மக்கள் அனைவரும் கோயிலை விட்டுப்போகும் வரை அவள் தன்னைவிட்டுப் போகக்கூடாது என்று உரிமையுடன் கேட்கிறான்.

காட்டிக் கொடுக்காதே கிழக்குப் போய் நிக்காதே
சொல்லிக் கொடுக்காதே தூரப் போய் நிக்காதே
கூட்டத்தில் என்னை வைத்து நீ கோயிலில் இருக்கலாமா
மந்தையில் என்னை வைத்து நீ மாளிகையில் இருக்கலாமா
சந்தன மெத்தையிலே சாய்ந்து நித்திரை செய்யாதே
குங்கும மெத்தையிலே குளிர்ந்து நித்திரை செய்யாதே
ஊரில் உள்ள மக்களுக்கு உத்திர வார்த்தை சொல்லவேணும்
நாட்டில் உள்ள மக்களுக்கு நல்ல வார்த்தை சொல்லவேணும்
இந்தக் கூட்டம் கலையந்தினும் என் கொடங்கை விட்டுப்போகாதே
இந்த சந்தைக் கலையந்தினும் என் மடியை விட்டுப் போகாதே.

## கோபம் வரவில்லையா

பக்தனுடைய அன்புத் தொல்லையால் அன்னைக்குக் கோபம் வந்து அவளுடைய நீலவிழிக் கண்கள் இரண்டும் நெருப்புத்தணல் ஆகவில்லையா, கோப விழிகள் கொழுந்து விட்டு எரியவில்லையா, வாயைத் திறந்து நல்ல வார்த்தை சொன்னால் வாய் முத்து சிந்திவிடுமா, அல்லது தான்வாயை திறந்தால் தங்கப்பொடி உதிருமா என்று வினவுகிறான்.

நீலமுழிக் கண்கள் இரண்டும் நெருப்புத்தணல் ஆகலேயா
கோபமுழிக் கண்கள் ரெண்டும் கொழுந்திட்டு எரியலேயா
பொங்கலியா கோபம் வந்து பொழியலியா மார்மேலே
வாயத்திறந்தா லென்ன வாமுத்து சிந்துமம்மா
தாவா திறந்தாலென்ன தங்கப்பொடி உதிருமம்மா

## பிள்ளை வரங்கேட்டல்

யார் யார் தங்களுக்கு என்ன வரம் வேண்டும் என்று கேட்கிறார்களோ அவர்களுக்கு அவர்கள் கேட்ட வரத்தைத் தருகின்ற தாயே, எல்லாச் செல்வங்களையும் பெற்று, மக்கள் செல்வம் இல்லாததால் மனக்குறையுடன் இருக்கும் மக்களுக்கு, மக் களைப் பெறுவதற்கு வேண்டிய வரத்தைத் தரவேண்டும் என்று கேட்கிறான்.

கையேந்தி கேட்ட வரம் கனத்த வரம் நீதருவாய்
மடியேந்தி கேட்ட வரம் மக்கவரம் நீ தருவாய்

## மாலையும் மணமும்

என்னைப் பெற்ற தாயே வடுவாயி! உன்னுடைய ஞாபகம் எங்கு உள்ளது? மனதை நிலையாக ஓரிடத்தில் வைத்து நல்ல செய்தி சொல்ல வரவேண்டும். உன்னுடைய வருகைக்காகச் சமுக்காளம் போட்டு, விடிய விடிய கச்சேரி நடைபெறும். அம்மா தாயே நீ மனம் வைத்து இங்கு வந்தால்தான் பொழுது விடியும், இல்லை என்றால் விடியாத பொழுதாகிவிடும். மல்லிகைப் பூ மாலை உன்னுடைய மார்பில் புரண்டு ஆடுகிறது. முல்லைப்பூ மாலை முதுகை அலங்கரிக்கிறது, கதம்பமணம் வீசுவதும், கஸ்தூரி வாடை அடிப்பதும் உனக்கு தெரியவில்லையா என்று குறை பட்டுக் கொள்கிறான்.

உனக்கு எங்க கவலையம்மா என்னைப் பெற்றவளே
ஆச்சி வடுவாயி உனக்கு எவ்விடம் ஞாபகமோ
உன் சிந்தை கலங்காம செய்தி சொல்ல வேணுமம்மா
இன்னிக்கு போட்ட சமுக்காளம் விடியந்தினும் கச்சேரி
வந்தா விடியுமம்மா வடுவாயி நீ வராங்காட்டி அஸ்தமிக்கும்
உனக்கு மல்லிகைப்பூ ஆரமம்மா உன் மார்பில் புரண்டாட
உனக்கு முல்லைப்பூ ஆரமம்மா உன் முதுகில் புரண்டாட
உனக்குக் கதம்பம் மணக்கலையா கஸ்தூரி வீசலையா

## பூசை வருதல்

அன்னையின் புகழ் நான்கு திசைகளிலும் பரவி இருக்கிறது. இதன் காரணத்தால் அவளை வணங்குவதற்கு தெற்குப் பகுதியில் இருந்து பூசை கொண்டு வருகின்ற மக்கள் பெருந்திரளாக வருவதால் தெருக் கொள்ளவில்லை. வடக்குப் பகுதியில் இருந்து வருகிறவர்கள் நீண்ட தூரத்தில் இருந்து வருவதால் வண்டியிலே வருகின்றனர். கிழக்குப் பகுதியில் இருந்து வருகிற மக்கள் கிளார், கொட்டு முதலிய வாத்தியங்களால் பேரிசை எழுப்பி வருகின்றனர். மேற்குப் பகுதியில் இருந்தும் அவளுடைய அன்பர்கள் வருகின்றனர் என்பதை மிகவும் அழகாகப்பாடுகிறான் பூசாரி.

அம்மா உனக்கு தெக்கத்திப் பூசைவரும் தெருவுகொள்ளாச் சேனை வரும்
அம்மா உனக்கு வடக்கத்திப் பூசைவரும் வண்டி கொள்ளாச் சேனை வரும்
அம்மா உனக்கு கிழக்கத்திப் பூசைவரும் கிளார் கொட்டு வாத்தியங்கள்
அம்மா உனக்கு மேற்கத்திப் பூசைவரும் மேளைட்டுச் சேனை வரும்.

## சேவகன் வருதல்

உனக்கு வரவேண்டிய பூசையெல்லாம் வந்துவிட்டது. இனியும் காலம் தாழ்த்தாமல் நீ வருவதற்கு அடையாளமாக உன்னுடைய சேவகனுக்குக் கழுத்தில் மாலை அணிவித்து உடனே அனுப்பிவைக்க வேண்டுமென வேண்டுகிறான்.

மாலைக் கழுத்திலிட்டு அனுப்பிவிடு சேவகனை
ஆரங் கழுத்திலிட்டு அனுப்பிவிடு சேவகனை

## பால் காய்ச்சுதல்

அன்னை இங்கு வந்தவுடன் அவள் அருந்துவதற்குப் பால் காய்ச்சி வைத்துள்ளதாகத் தெரிவிக்கிறான்.

ஆலஞ்சருவு அருச்சி ஆதரவாய் பால்காச்சி
புங்கம் சருவு அருச்சி போதரவாய் பால் காச்சி

## அரசுப் பட்டம் கட்டி ஆளவந்தவளே

எட்டாத தேசமாகிய வானுலகையும், இப்பூலோகத்தையும் ஆள்வதற்கு அரசுப் பட்டம் கட்டி வந்துள்ள தாயே வரவேண்டும் என்று அழைக்கிறான்.

எட்டாத தேச மெல்லாம் தொட்டாளப் பெண் பிறந்தாய்
பெண்ணாய்ப் பிறந்தல்லவோ பூலோகத்தை ஆளவந்தாய்
ஆணாய்ப் பிறந்தல்லவோ அரசுப் பட்டம் ஆளவந்தாய்.

## தேர் அழகியே வா

செம்பால் செய்யப்பெற்ற சிலையின் அழகினையும், புதிதாக வார்த்த சிலையின் பொலிவையும் பெற்றவளே, சிவந்த மணிகளும், மணிகள் கோத்த துணிகளும் தொங்கும் அழகிய தேரை உடையவளே வருக!

செப்புச்சிலை அழகி சிந்தாமணித் தேரழகி
வார்ப்புச் சிலை அழகி வஸ்தரமணித் தேரழகி

## தேர் வடம் பிடித்தல்

அன்னை அமர்ந்து உலா வருகிற அழகிய தேரின் வடத்தை ஊர் மக்களும், பார்ப்பனரும், நாட்டாரும் (வணிகர்) பிடித்து இழுக்கின்றனர்.

ஊரார் வடம் பிடிக்க உத்தமியார் தேரடக்க
பாப்பார் வடம் பிடிக்க பத்தினியார் தேரடக்க
நாட்டார் வடம் பிடிக்க நாயகியார் தேரடக்க

## தேர் அசைந்து ஓடுதல்

தேர் வடம் பிடித்துப் பக்தர்கள் இழுக்க, அவர்கள் மனங்குளிர அவர்களுக்கு அருள்பாலித்த அன்னை வடுவாயி அமர்ந்துள்ள தேர் இனிதே அசைந்து ஓடுகிறது என்று முடிக்கிறான் பூசாரி.

அச்சு கிருகிருங்க ஆனைக்கால் ஓசையிட
உருளை இல்லாத் தேரடியே ஓடுதே உன் அருளால்
அச்சில்லா தேரடியே அசையுதே உன் அருளால்

இப்பாட்டு மிகவும் எளிமையாகவும். நெஞ்சைத் தொடுகின்ற வகையிலும் அமைந்துள்ளது. எளிமையான வழிபாட்டு முறை இருந்தது என்பது தெரிகிறது. தெய்வத்தினுடைய முழு உருவத்தின் அழகினைச் சொல்லி வழிபடுகிற பழக்கம் இருந்திருக்கிறது. வழிபடும் பொழுது பூக்களைச் சொரிந்து வழிபட்டனர். 'வருணை லட்சம் பூ வெடுத்து' என்ற அடி நமக்கு இன்றைய 'லட்ச அர்ச்சனையை' நினை வூட்டுகிறது. பூசைக்கு வேண்டிய பூக்களைப் பறித்துக் கையில் எடுத்து வந்து தெய்வத்திற்குச் சூட்டினால் புனிதத்தன்மை கெட்டுவிடுமென்று கருதி, தென்னை ஓலை யில் தொன்னை தைத்து அதில் பூவெடுத்து வந்து பூசை செய்தனர் என்பதைத் 'தோட்டாந் திரந்து மல்லா தொன்னை தைத்துப் பூவெடுத்து' என்று பாட்டு குறிக் கிறது. மல்லிகைப்பூ, முல்லைப்பூ. கதம்பப்பூ ஆகிய பூக்களையும், கஸ்தூரி போன்ற வாசனைப் பொருள்களையும் கொண்டு வழிபாடு செய்தனர் என்பது வெளிப்படுகிறது.

பூசைப் பொருள்களை மக்கள் பெருந்திரளாக வண்டியிலும், நடந்தும் கொண்டுவந்தனர். அப்படிக் கொண்டு வரும்பொழுது இன்னிசைக் கருவிகளான கிளார், (ஊதி ஒலி எழுப்பும் கருவி) கொட்டு (அடித்து ஒலி எழுப்பும் கருவி) முதலிய

வாத்தியங்களால் பேரிசை எழுப்பி வந்தனர் என்பது தெரிகிறது. விழாவின் போது எல்லா இனத்தவரும் ஒன்று கூடி மகிழ்ந்திருந்தனர் என்பதை அறிய முடிகிறது.

தேர் ஓடவேண்டுமென்றால் உருளையும், அச்சும் தேவை. இவை இரண்டும் இல்லாமலே தேர் ஓடியது என்று பாட்டுக் குறிக்கிறது. இதிலிருந்து தெய்வத்தை நம்பினால் எதுவும் நடக்கும் என்று மக்கள் நம்பினர் என்பதையும், அவர்களுடைய பக்தியின் மேம்பாட்டையும் இப்பாட்டு படம் பிடித்துக் காட்டுகிறது.[1]

---

1. பாடியவர் மாத்தூர் வடுவாயி அம்மன் கோயில் பூசாரி திரு. மாணிக்கம் பிள்ளை. உதவியவர் : திரு. கே. ஸ்ரீதரன், எம். ஏ., தொல்பொருள் ஆய்வாளர்.

(6-ம் பக்கத் தொடர்ச்சி)

முத்தரையர்கள் பிடாரிக்குக் கோயில் எடுப்பிப்பதிலும் வழிபாடு நிகழ்த்துவதிலும் பெரிதும் ஈடுபாடு கொண்டிருந்தனர். தஞ்சையை அடுத்த செந்தலையில் 'பெரும்பிடுகு முத்தரையனாயின சுவரன் மாறனவனெடுப்பித்த படாரி கோயில்' குறிப்பிடப்படுகிறது. இங்கு பிராந்தக முத்தரையன் விளக்கெரிக்க நிவந்தம் அளித்துள்ளான். கல்வெட்டுக்கள் மூலம், இக்கோயில் பராந்தகனுக்கு முற்பட்டது என்பது வெளிப்படை. விஜயாலய சோழன் தஞ்சையில் நிசும்பசூதனியைப் பிரதிஷ்டை செய்த போதே இக்கோயிலில் உள்ள தெய்வமும் பிரதிஷ்டை செய்யப்பட்டதோ என்று எண்ணத் தோன்றுகிறது.

தஞ்சை வட்டம் மாத்தூரில் வடுவாயி அம்மனைப் பற்றிய ஒரு நாட்டுப் பாடலில் ஏகௌரி அம்மன் குறிப்பிடப் பெறுகிறாள்.

வல்லத்து ஏகௌரி வடக்குப்பாத்த செல்வி
நீலி கபாலி நிரந்தரோர் பஞ்சாட்சரி
நாலு மூல சௌந்தரியே நாயகியே வாருமம்மா.[3]

---

1, 2 த. அ. தொ. ஆ. துறை சிற்ப ஆய்வு செய்தபோது புதிதாக படியெடுத்த கல்வெட்டுக்கள்.

3. சேகரித்தவர் கு. தாமோதரன், பதிவு அலுவலர்.



ராஜசிம்மனின் பட்டப் பெயர்கள்
சித்திரம் போன்ற பல்லவ கிரந்த எழுத்துக்களில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டு.
காஞ்சிபுரம் கைலாசநாதர் கோயிலில் உள்ளது.

# பாஞ்சாலங்குறிச்சிப் போர்–

## பார்த்தவர் கூறுகிறார்

*பாஞ்சாலங்குறிச்சிப் போரை ஒருவர் நேர்முகமாகக் கண்டார். அப்போரில் பங்குகொண்டவர் அவர். பாஞ்சாலங்குறிச்சி மறவர்களின் பெரு வீரத்தையும், தன்னலம் இல்லாத் தியாகத்தையும், கடும்போரின் இடையிலும் மாற்றானுக்குக் கனிவுகாட்டும் பெருந்தன்மையையும் போற்றிப் புகழ்ந்திருக்கிறார். பீரங்கிப் பலத்தையும், துப்பாக்கிப் பலத்தையுமே கொண்டு பாஞ்சாலங்குறிச்சியைக் கைப்பற்றிய கும்பினியாரின் படையைச் சேர்ந்தவர் அவர். அம்மாற்றாரின் கூற்று இதோ:*

கோட்டைவாயிலின் வட பகுதியைப் பிளந்து உள்ளே செல்ல வேண்டும் என்பது எங்கள் திட்டம். ஆறு பவுண்டுக் குண்டுகளை வீசும் இரண்டு பீரங்கிகளும், இரண்டு ஹோவிட்சர் என்ற பீரங்கிகளும் இதில் பங்கு கொண்டன. 74-வது ரெஜிமெண்டைச் சேர்ந்த இரண்டு படைக் கம்பெனிகள் பாய்ந்துசென்று பிளவைப் பிடிக்க அனுப்பப்பட்டன. அவர்களுக்கு உதவியாக கைக்குண்டு எறியும் உள்நாட்டுப் படை வீரர்கள் அனுப்பப்பட்டனர். இவர்களுக்கும் உதவியாக மூன்றாவது பட்டாலியன் வலப்புறமும் இடப்புறமுமாக வரிசை வரிசையாகப் பிரிந்து கோட்டை மீது பாய்வோருக்கு உதவியாகச் சுட்டுக் கொண்டே முன்னேறியது. நம் வீரர்கள் மிகவும் வேகமாக முன்னேறினர். வேலி வெகு விரைவில் தாண்டப்பட்டது. நினைக்க முடியாத அளவுக்கு அவ்வளவு அதிகமாக சுட்டுக் கொண்டே முன்னேறினர். ஆனால் திரும்பத் திரும்ப கோட்டைப் பிளவின் மேல் ஏறச்செய்த முயற்சிகள் ஏதும் பயனளிக்கவில்லை.

மேலே ஏற முயற்சித்த ஒவ்வொரு வீரனும் வேல் முனைகளாலும், துப்பாக்கிகளாலும் தாக்கப்பட்டுத் தூக்கி எறியப்பட்டான். கோட்டை மீது ஓர் அடி கூட வைக்க முடியவில்லை. முடிவில் திரும்பிவிட ஆணையிட்டோம். அப்பப்பா! விளைவு சொல்ல முடியாத பயங்கரம். நமது கொல்லப்பட்ட படை வீரர்களும், குற்றுயிராய்க் கிடந்தவர்களும் கோட்டைப் பிளவு வாயிலிலேயே கிடந்தார்கள். எதிரி வீரர்கள் நம் பின் பாய்ந்தனர். கிடந்தோர் உடல்களையும், இறந்தோர் உடல்களையும் குத்தித்தீர்த்தனர்.

கோட்டைப் பி[illegible]றும் வேல்முனைகள் மட்டும் காத்து நின்றன. அதன் பின்[illegible]கள் நம் வீரர்களைச் சுட்டுத்தள்ளிய வண்ணம் இருந்தனர். [illegible]ளோலக்க அறையின் [illegible]ல் ஒரு ஹோவிட்சர் பீரங்கியை பிளவின் வாயிலில் விட்[illegible]ாம். ஆதலின் அதை எடுத்து வர ஆறு தளபதிகளுட[illegible]நம்பிச் சுட்டுக் கொண்டே

சென்றனர். இப்பணியில் பல வீரர்களும் ஒரு அதிகாரியும் கொல்லப் பட்டனர்; பிறர் காயமடைந்தனர்.

நமது படைகள் மிகவும் பத்திரமான இடத்தை ஓடி அடைந்ததும் மீண்டும் அணி வகுத்தோம். கோட்டையிலிருந்து சுமார் ஒரு மைலுக்கு அப்பால் இப்பொழுது இருந்தோம். நமது வெடிகளேயும் பீரங்கிகளேயும் எதிரிகளின் கண்ணுக்கு எட்டாமல் ஒளித்து வைத்தோம். எங்களது ஆபத்திலும் தோல்விகளிலும் பங்கு கொள்வதுபோல் எங்கள் அணியில் பயங்கர நிசப்தம் நிலவியது. நம்மை விட்டுப் பிரிந்த நமது சகோதரர் களுக்கு மனதால் அஞ்சலி செலுத்துவதாக அது அமைந்திருந்தது. நமக்கு மேலும் எல்வித தொந்தரவும் அளிக்காமல் நமது எதிரிகள் நமது துன்பங்களுக்கு மரியாதை செலுத்தினர்.

இன்று நமக்கு ஏற்பட்ட முழுத் தோல்விக்கு காரணம் என்ன என்பது சொல்லொணுததாகவே இருந்தது. அந்தப் பிளவு எப்படி காப்பாற்றப்பட்டது என்பது மாயமாகவே இருந்தது. ஒரு எதிரி கூட அப்பிளவில் இருந்ததாகத் தெரியவில்லே ஒரு தலே கூட வெளியே தெரிய வில்லே. அங்கிருந்த அரண் சிகரங்களே நாங்கள் அழித்திருந்தோம். அங்கே யார் இருந்தார்கள்? எப்படி இருந்தார்கள் என்றே புரியவில்லே. அப் பிளவில் எங்களுக்கு வெறும் வேல் முனைகள் மட்டுமே தெரிந்தன. எதிரி கள் கோட்டையின் பிற இடங்கள் அனேத்திலும் காணப்பட்டனர். நமது படையினர் சுட்டுத் தள்ளிக் கொண்டே இருந்தனர். அதை அவர்கள் சிறிதும் மதித்ததாகவே தெரியவில்லே. எவ்வித நடுக்கமுமின்றி உயிரை மதியாது பணி புரிந்து கொண்டிருந்தனர். நாம் படைகளே மாற்றி மாற்றி அனுப்பிக்கொண்டிருந்தோம். ஆனல் அவர்கள் அதைப் பற்றிச் சிறிதும் கவலேப்படவில்லே. ஆனல் ஐயாயிரத்துக்கும் மேற்பட்டவர்கள், போர்க் குரல் கொடுத்துக் கொண்டேயிருந்தார்கள். நாம் திரும்பி ஓடிய பிறகுதான் அவர்களது போரொலி நின்றது. நமது படைகளில் பங்கு கொண்ட 140 ஐரோப்பியர்களில் 106 பேர் இறந்தனர். அல்லது படுகாயமுற்றனர். இது மிகவும் மாபெரும் இழப்பு என்பதில் ஐயமில்லே.

ஏப்ரல் முதல் நாளன்று கோட்டைப் பிளவு வாயிலில் வீழ்ந்து இன்னும் புதைக்கப்படாமல் இருக்கும் நமது வீரர்களேத் தாங்கொணு மனத்துயரத்தொடு கண்டோம். ஒரு சமாதானக் கொடியைக் கோட்டைக் குள் அனுப்பினேம். இறந்த நமது வீரர்களேப் புதைப்பதற்கு அனுமதி வேண்டி இக்கொடியை அனுப்பினேம். எவ்வித நிபந்தனேயும் இன்றி அனுமதி அன்போடு அளிக்கப்பட்டது. [illegible] வேறு துண்டங்களாகக் கிடந்த நமது வீரர்களின் உடல்களே எ[illegible] போர் மரியாதைகளு டன் புதைத்தோம். நமது எதிரி [illegible] தன்மையுடனும் நமக் கெல்லாம் வழிகாட்டும் வகைபட்ட பெயர்கள் கொண்டதை எண்ணி வியக்கிறேம். இ[illegible]மியளவுகூட [illegible]க்களில் பொறிக்கப்ப தொந்தரவும் அளிக்காது நாதர் கோயிலில் உள்ள வழிகாட்டினர்.



இத்துறையால் வெளிக்கொணரப்பட்ட கட்டபொம்மனின்
அரண்மனைப் பகுதிகள், பாஞ்சாலங்குறிச்சி, நெல்லை மாவட்டம்.



நாளோலக்க அறையின் தோற்றம்.



நாளோலக்க மண்டபத்தின் அடிப்பகுதி; அரசுக்கட்டில் இருந்த அடிப்பீடம்



அந்தப்புரத்தின் அடிப்பகுதி.

அனும
கிடந்த நம்
டன் புதைத்தே
கெல்லாம் வழிகா
வியக்கிறோம். இ
வழிகாட்டினர்.



அரசியர் இருக்கை முன்புறம்.



யானை கட்டும் தறி.



கட்டபொம்முவின் முன்னோர் சிலை.



சுதையாலான தாமரை போன்ற அலங்கரிப்பும், இன்ன பிற அலங்கரிப்புகளும்.



பீரங்கிக் குண்டுகள், பீங்கான் தட்டு, ஆப்பச்சட்டி. மதுப்புட்டி முதலியன,
பாஞ்சாலங்குறிச்சி

Cl. James Welsh என்பார் தனது போர் நினைவுகள் என்னும் நூலில் இவ்வாறுகூறுகிறுர். அவர் இப்போரில் நேர்முகமாகப் பங்கு பெற்றவர். அவரது நூல் 1830-இல் அச்சிடப்பட்டது. பாஞ்சாலங்குறிச்சி என்ற தலைப்பின்கீழ் சுமார் 18 பக்கங்கள் அவர் பாஞ்சாலங்குறிச்சிப் போரை சித்திரித்துள்ளார்.

## Fanjalum Coorchy :

An irregular parallelogram two sides of which were about five hundred feet and the other two about three hundred feet only built entirely of mud of a very solid and adhesive quality, presented so very unwar like an object to the eye that some of our soldiers, at first sight, Compared it to a kail yard with a dike about it. The wall was generally about twelve feet high with small square bastions, and very short curtains. A few old guns were mounted in these bastions, and the whole was sorrounded by a thick hedge of cockspur thorns, but no ditch. Arriving before it at eight o'clock A.M. Preparations were instantly made for breaching the north-western bastion, with the two iron twelve and one eight-pounder from a bank about nine hundred yards distance and at half past eight we opened a fire though by no means so destructive as was anticipated. The eight pounder, indeed a foreign gun, fired so wild, that the shot seldom hit the fort. At noon, therefore, the guns were moved on to another bank, about four hundred years from the wall and continued playing till half-past three, when the breach appearing practicable, the storm was ordered. The two howitgers and two six-pounders had also been firing on the fort from a bank to the north-ward, but the sheels were so bad and the fuses so miserable that few of them burst, or did any execution.

The party for assault was composed of the two companies of the 74th regiment, all the native granediers, and a battalion company of the 3rd, the whole line being close to them, disposed to the right and left, to keep down the enemy's fire. They advanced with alacrity, under the heaviest fire imaginable, from the curtains and five or six bastions, the defences of which we hat not been able to demolish our men feel rapidly, but nothing impeded their approach, even the hedge was speedily passed and repeated attempts were made to surmount the breach but all in vain. Every man who succeeded in reaching the summit was instantly thrown back, pierced with wounds, from both pikes and musquetry and no footing could be gained. At length a retreat was ordered and truly dismal scene of harror succeeded, all our killed and many of the wounded being left at the foot of the breach, over which the enemy immediately spring and pursued the rear while others pierced the bodies both of the dying and the dead.

The immediate defence of the breach was with pikes, from eighteen to twenty feet long behind which a body of men frain on elevated spot,

kept up a constant fire, whilst others in the bastions took the assailants in flank. In the confusion of moment a hourtzer was left near the breach, which was afterwards rescued by six Officers and about fifty sepoys, under a fire, which killed one of the officers and several of the men and wounded two other officers and five or six men. And here let me record the personal bravery and devotion of captain Nicholas Mathew Smith, the first man who reached the gun and whose example stimulated the rest, he was a fine honest fellow and a good soldier, but with the noble James Grant and several others, he has since paid the delet of nature. Our total loss this day was four officers and forty nine men, killed and thirteen officers and two hundred and fifty four men, wounded; besides several slight cases, not reported. Of the enemy's loss we had no account. No sooner had we gained a safe distance from the fort, than the line was formed, and encamping ground marked out, the nearest part being at a distance of 1,500 yards from the walls. We had a high ridge in the centre of the line, running parallel to the fort, and our ammunition and stores were placed in the rear out of sight of the enemy; Our picquets were posted on the bank from whence we first attempted to breach and it was completely dark before we could get under cover.

As all had a like partakers in all dangers and discomfiture of the day, a dead silence reigned throughout our line, the only tribute we could then pay to the memory of our departed brethern, and the enemy so far respected our grief, as to allow us it's unmolested indulgence.

To a mind accustomed to think our total failure of this day was perfectly inexplicable and how the breach was defended appeared almost miraculous for none of the actual defenders over showed themselves above the broken parapet, and certainly that was entirely destroyed and a practicable passage apparently made to the terre plein of the bastion, long previous to our attack. Yet here a grove of pikes alone presented itself to our view; and the enemy appearing in every other part of the works, exposing themselves without the smallest reservation, were constantly shot by our men, who were covering the storm, and as constantly shot by our men, who were covering the storm, and as constantly replaced by others; whilst they kept up a most unnatural yell the whole time, from upwards of five thousand voices, which only ceased with our retreat. Of one hundred and twenty Europeans on the storming party only forty six escaped unhurt, and including Officers and artillery, one hundred and six were killed and wounded of the whole force. This was so very large a proportion as to make the duty come heavy on the survivors for a considerable time, when our disheartened men required a constant and undeviating example of that cheerful devotedness to their duty which can alone secure the confidence of soldiers in times of unusual diffity and danger.

